[9th November 1961

SRI A. R. MARIMUTHU : பொதுவாக தயாரிக்கப்படும் விவசாயக் கருவிகள் மிகவும் தரம் குறைந்தவைகளாக இருக்கின்றன. சமீபத்தில் ஹரிஜன வெல்பேர் டிபார்ட்மெண்ட் மூலம் கொடுத்த விவசாயக் கருவிகளை சரியானபடி உபயோகப்படுத்த முடியவில்லை. ஆகவே, இந்தக் கருவிகளை நல்ல முறையில் தயாரிக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுபற்றி அப்போதைக்கப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. அதோடு கருவிகளை மட்டும் குறை சொல்லுவதில் பிரயோசனம் இல்லை, அதை உபயோகிப்பவர்கள் மீதும் தவறுகள் இருக்கலாம்.

*Supply of fertilizers (Tiruchirappalli district)*

* 1932 *Q.*—SRI T. KARIA GOUNDER (on behalf of SRI G. ANNAMALAI MUTHURAJA) : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) திருச்சி ஜில்லாவிற்கு நடைமுறை விவசாய ஆண்டிற்கென ஒதுக்கப்பட்ட உர மூட்டைகள் எவ்வளவு?

(இ) அது எந்த முறையில் விநியோகிக்கப்படும்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The total quantity of fertilizers fixed for Tiruchirappalli district for 1961-62 is 13,300 tonnes in terms of Ammonium Sulphate (one metric tonne of Ammonium Sulphate is sent in 10 bags of 100 kilograms each. In respect of other fertilizers one metric tonne is sent in 20 bags of 50 kilograms each).

(*b*) The retail distribution of these fertilisers to the ryots is done solely through the primary co-operative societies.

SRI A. GOVINDASAMY : திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் அரியலூரில் ரசாயன உரத்தோடு சாப்பாட்டுக்கான உப்பையும் சேர்த்து விற்பனை செய்ததாக தகவல் இருந்ததே, அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது? இதில் யார் யாரெல்லாம் தண்டிக்கப்பட்டார்கள்?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பழைய விஷயம். வேறு சில இடங்களிலும் இம்மாதிரி நடந்திருக்கின்றன. முக்கியமாக தென்னாற்காடு மாவட்டத்தில் மிகவும் அதிகமாக நடப்பதாக தகவல். இதைக் கண்டுபிடித்து கேஸ் போடப்படுகிறது. அதை கோர்ட்டுக்கு அனுப்புகிறார்கள். கோர்ட்டில்தான் தகுந்தபடி தண்டனை கொடுக்கப்படும்.

SRI A. GOVINDASAMY : தென்னாற்காடு ஜில்லாவில்தான் அதிகமாக நடப்பதாக அமைச்சர் அவர்கள் சொல்லுகின்றார்கள். அதை ஏன் போலீஸ் நிர்வாகம் சரியாக கண்டு பிடிக்கவில்லை?

9th November 1961]

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** *போலீஸ் நிர்வாகத்தின் குறைவு என்று என்ஞல் ஒருக்காலும் ஒப்புக்கொள்ள முடியாது. போலீசார் தக்கபடி நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிருர்கள்.*

**SRI T. M. NALLASAMI:** *1960-61-ம ஆண்டில் அமோனியம் சல்பேட் உரம் கரும்பு உற்பத்தி செய்பவர்களுக்கு என்று தனியாக ஒதுக்கப்பட்டுள்ளதா? அப்படியாஞல் அது சரியாக வினியோகம் செய்யப்பட்டிருக்கிறதா?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** *கரும்பு உற்பத்தி செய்பவர்களுக்கு என்று தனியாக ஒதுக்கப்பட்டிருக்கின்றது. சில இடங்களில் இதை கூட்டுறவு சங்கங்கள் மூலமாகவும், சில இடங்களில் ஃபாக்டரிகள் மூலமாகவும் வினியோகம் செய்யப்படுகிறது.*

**SRI T. K. SUBBIAH:** *அரியலூரில் நடந்த உப்பு கலப்படத்திற்கு தென்ஞற்காடு ஜில்லாவிலிருந்துதான் காலி சாக்குகள் வந்தன என்று சொல்லப்படுவது உண்மையா?*

**THE HON. SRI M. BHAKTAVATSALAM:** *அந்தத் தகவல் என்னிடமில்லை.*

*Azhagar Hills*

***1933 *Q.*—SRI A. E. CHANDRASEKHARANAYAGAR:** *கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) மதுரைக்கடுத்த அழகர் மலை யாருக்குச் சொந்தமானது?*

*(இ) அம்மலையின் பேரில் எத்தனை கோயில்கள், மடங்கள், தீர்த்தங்கள் இருக்கின்றன? அவைகளின் பெயர்கள் என்ன?*

*(உ) அழகர் மலையின் பேரில் ஜம்புலபுத்தூர் மண்டபம் என்று ஒன்று இருக்கின்றதா? அந்த மண்டபத்தில் வேறு கோயில்கள் கட்ட முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறதா?*

*(எ) அப்படியாஞல் அம்முயற்சிக்கும், சர்க்காருக்கும் சம்பந்தம் என்ன?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) It belongs to the Government.

*(இ)* There are three theerthams on the Hills, Hanumar theertham, Garuda theertham and Nupra Gangai theertham. There are no temples or madams on the Hills.

*(உ)* There is no mantapam on the Hills known as "**Jampulaputhur** Mantapam".

*(எ)* Does not arise.